# தோற்றம்

"தமிழால் இணைவோம்" என்ற குழு திருமதி ஆனந்தி ஜீவா அவர்களால் முகநூலில் 11.11.2020ல் தொடங்கப்பட்டது. இந்த குழுவின் இணை நிர்வாகி என்ற பொறுப்பை திரு கௌரிசங்கர் அவர்கள் ஏற்றுக்கொண்டார்.

அங்கத்தினர்களின் தமிழ் எழுத்து வல்லமையை உருவாக்குவதே இதன் நோக்கம். இந்த நோக்கத்தை

முன்னிறுத்தி அங்கத்தினர்களின் எழுத்து ஆற்றலை வலுவாக்குவது என்ற வகையில் இந்த விதிகள் கொண்டு வரப்பட்டன.

01. பதிவுகள் தமிழில் இருக்க வேண்டும்

02. சொந்த பதிவுகளாக இருக்க வேண்டும்.

03. வேற்று தளங்களில் உள்ள பதிவுகளை பகிர்வு செய்யக்கூடாது.

04. பதிவுகள் எப்படி வேண்டும் என்றாலும் இருக்கலாம் -

சிறுகதைகள், குறுங்கதைகள், நகைச்சுவை துணுக்குகள், கவிதைகள், தகவல்கள், கட்டுரைகள் போன்றவை.

05. அரசியல் மற்றும் சினிமா சம்பந்தமான பதிவுகளுக்கு அனுமதியில்லை.

06. படைப்புகள் தமிழில் தான் இருக்க வேண்டும் என்பது தான் ஒரு இறுக்கமான விதி.

இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் கொண்டாடும் இந்த குழுவில் அங்கத்தினர்கள் தங்கள்

படைப்புக்களைப் பதிவிடலாம், விவாதிக்கலாம், கருத்துக்களைப் பகிரலாம். படைப்பாளிகளையும் விமர்சகர்களையும் ஊக்குவிக்கும் இந்த குழு எந்த ஒரு இயக்கத்தையும் சாராத தமிழ் குழு. கதைகளைச் சொல்லும் கதைச்சொல்லி, பாடகர்கள், ஆடல்கலைஞர்கள், ஓவியர்கள், எழுத்தாளர்கள், விமர்சகர்கள் போன்றவர்களுக்கு உகந்த தளம்.

---:: :::---

# தை சிறப்பிதழ்

இந்த இதழ் ஒரு சிறப்பிதழாகும். இதழ் ஒன்று முதல் ஐந்து வரை வெளியான மின் இதழ்களில் எழுத்துப்பட்டறை போட்டிகளின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறந்த பதிவுகளை பதிவேற்றம் செய்திருந்தோம்.

இந்த ஆறாவது இதழில் திருமதி காயத்ரி பார்த்தசாரதி அவர்கள்

தமிழால் இணைவோம் முகநூல் தளத்தில் "இன்று ஒரு தகவல்" என்ற தலைப்பில் பல அரிய தகவல்களை தொகுத்து வழங்கிய முப்பது பதிவுகளை கோர்த்து அங்கத்தினர்களுக்கும், மற்ற வாசிப்பாளர்களுக்கும் பயனளிக்கும் வகையில் தந்துள்ளோம். அனைவரையும் வாசித்து பயனடையுமாறு விண்ணப்பித்துக் கொள்ளுகிறோம்.

# எழுத்தாளர் பற்றி

தமிழகத்தைச்சார்ந்த திருமதி காயத்ரி பார்த்தசாரதி அவர்கள் தற்போது சவூதி அரேபியாவில் குடியிருந்து வருகிறார். அவர் ஒரு முதுநிலை பட்டதாரி. அவர் ஒரு இல்லத்தரசி. அவருடைய கல்வி தகுதிகள் - M. Sc., B.Ed., M Phil. கணிதம் கற்றுள்ளார். அவருடைய பொழுதுபோக்கு - புத்தகங்கள் படிப்பது; அவற்றை பற்றி

ஆராய்ச்சிகள் செய்வது; தனது கருத்துக்களை பிறருக்கு சொல்லுவது.



# இந்த இதழில் அடங்கிய தகவல்கள்

முப்பது பதிவுகளும் முத்தான பதிவுகள். கல்வெட்டுகள், ஆமைகள், திருக்குறள் பற்றிய அரிய தகவல்கள், தமிழ்த்தாய் வாழ்த்து தோன்றிய வரலாறு போன்ற வித்தியாசமான முப்பது தகவல்கள் அடங்கியுள்ளன. மாணவ மாணவிகள், போட்டிகளில் பங்கு பெறுபவர்கள், தகவல் பசி

கொண்டவர்களுக்கான ஒரு அரிய தொகுப்பு.



# இன்று ஒரு தகவல்

காயத்ரி பார்த்தசாரதி

01

17.11.2020

# ஓலைச்சுவடி

கி.மு 5 ஆம் நூற்றாண்டிலிருந்து கி.பி 19ஆம் நூற்றாண்டு வரை ஆசியக் கண்டத்தில் உள்ள பெரும்பாலான

பகுதிகளில் எழுதப்படுபொருளாகப் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது.

கட்டிடக்கலை, கணிதம், வானியல், சோதிடம் மற்றும் மருத்துவம் பற்றின ஓலைச்சுவடிகளே அதிகம்.குறிப்பிட்ட காலங்களுக்கு ஒரு முறை புதிய ஓலைச்சுவடிக்கு தகவல்கள் மாற்றப்பட்டு வந்துள்ளது.

ஒரு ஓலைச்சுவடியை சரியான முறையில் பாதுகாக்கப்பட்டிருந்தால் அதன் ஆயுட்காலம் சராசரியாக 200 -

விருந்து 300 ஆண்டுகள் மட்டுமே இருக்கும்.

இலங்கையில் இருக்கும் அநுராதபுரத்தில் 1100 வருட பழமை வாய்ந்த ஓலைச்சுவடிகள் கண்டுப்பிடிக்கப்பட்டுள்ளன.

---:::  :::---

# 02

# 18.11.2020

# எழுத்தாணி

பழங்காலத்தில் ஓலைச்சுவடிகளில் எழுதுவதற்குப் எழுதுப்பொருளாக எழுத்தாணி பயன்படுத்தப்பட்டது. சங்க இலக்கிய நூலான சிந்தாமணி கூருளியும் ஊசியும் எழுத்தாணிப் போன்று பயன்படுத்தப்பட்டதாக

குறிப்பிடுகின்றன. எழுத்தாணி என்கிற சொல்லாட்சியை முதன் முதலாக ஏலாதி தான் குறிப்பிடுகிறது.

ஏலாதி

"ஊணோடு கூறை யெழுத்தாணி

புத்தகம்

பேணோடு மெண்ணும் மெழுத்திவை-

மாணோடு

கேட்டெழுதி யோதிவாழ் வார்க்கீய்ந்தா

ரிம்மையான்

வேட்டெழுத வாழ்வார் விரிந்து".

வகைகள்:

அலகெழுத்தாணி, குண்டெழுத்தாணி, கணையெழுத்தாணி, மடிப்பெழுத்தாணி, மடக்கெழுத்தாணி, வாரெழுத்தாணி மற்றும் தேரெழுத்தாணி.



03

19.11.2020

# நூல்-கணக்கதிகாரம்

ஓர் பலாப்பழத்தை பிளக்காமல் அதில் எத்தனை சுளைகள் இருக்கிறது என்பதை உங்களால் கூற முடியுமா?

ஆம் முடியும்.

இதற்கான விடை காரிநாயனார் இயற்றிய "கணக்கதிகாரம்" என்னும் நூலில் உள்ளது.

பாடல்

" பலாவின் சுளையரிய வேண்டுதிலேல்

ஆல்கு

சிறுமுள்ளுக் காம்பரு எண்ணி-

வருவதை

ஆறிற் பெருக்கியே ஐந்தனுக் கீந்திடவே

வேறெண்ண வேண்டாம் சுளை".

விளக்கம்:

பலாப்பழத்தின் காம்புக்கு அருகில் உள்ள சிறு முட்களை எண்ணி ஆறாலே பெருக்கி ஐந்தால் வகுக்க

பலாப்பழத்தினுள் உள்ள சுளைகளின் எண்ணிக்கையை அறியலாம்.



04

20.11.2020

# சித்தன்னவாசல் குகை ஓவியங்கள்

தமிழ்நாட்டின் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள சித்தன்னவாசல் என்ற கிராமம் குடைவரை ஓவியங்கள் மற்றும் குகை ஓவியங்களுக்கு மிகப் புகழ் பெற்றவை.

சித்தன்னவாசல் குகை ஓவியங்கள் சமணர் காலத்து ஓவியங்கள்.இவை கி.பி 7 மற்றும் 8 ஆம் நூற்றாண்டை சேர்ந்தவை.

குன்றுகளால் சூழப்பட்ட இந்த ஓவியங்கள் சமணர்களால் மூலிகையால் தயாரிக்கப்பட்ட வர்ணங்களைக் கொண்டு வரையப்பட்டவை.

அஜந்தா ஓவியங்களைப் போன்று தனிச்சிறப்பு மிக்க இந்த ஓவியங்கள்

சுமார் 1000-1200 ஆண்டுகள் பழமையானவை.

சித்தன்னவாசல் ஏழடிப்பட்டம் என்ற இடத்தில் சமணர்களின் படுக்கைகளும் தமிழ் கல்வெட்டுகளும் உள்ளன.அறிவர் கோயில் எனப்படுகின்ற சமணக் கோயில் ஒன்றும் இங்குள்ளது.



05

21.11.2020

## நூல்-- கணக்கதிகாரம்.

ஒரு பூசணிக்காயில்(பரங்கிக்காய்) எத்தனை விதைகள் உள்ளன என்பதைக் கூற இயலுமா?

ஆம் இயலும்.

வாருங்கள் விடையை கணக்கதிகாரம் நூலின் அமைந்துள்ள ஒரு பாடலின் மூலம் அறியலாம்.

பாடல்



"கீற்றெண்ணி முத்தித்துக் கீழாறினால் மாறி

வேற்றையருசு தன்னில் மிகப்பெருக்கிப் பார்த்ததிலே

பாதித் தள்ளி மூன்றிற் பகிர் விதையாகும்

பூசணிக்காய் தோறும் புகல்".

விளக்கம்

ஒரு பூசணிக்காயின் கீற்றுக்களை எண்ணிக்கொண்டு அதை மூன்று, ஆறு, ஐந்து இவற்றால் பெருக்கி வரும் விடையை பாதியாக்கி மீண்டும்

மூன்றாம் பெருக்கினால் வருவது விதைகளின் எண்ணிக்கையாகும்.



# 06

# 22.11.2020

# போதையனார் தேற்றம்

இன்று உலகம் முக்கோணவியலின் தத்துவத்தை பித்தாகரஸ் நிறுவிய "பித்தாகரஸ் தேற்றம் " வாயிலாக மாணவர்களுக்கு கற்பித்து வருகிறது.

ஆனால் பித்தாகரஸ் பிறப்பதற்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பே "தமிழ் அறிவியலாளர் போதையனார்"என்பவர்

முக்கோணவியலின் தத்துவத்தை

பாடலாக எழுதியுள்ளார்.

அந்த பாடல்

"ஓடிய நீளந்தன்னை ஓரெட்டு கூறாக்கி

கூறதில் ஒன்றைத் தள்ளி

குன்றத்தில் பாதி சேர்த்தால்

நீட்டிய கர்ணந் தானே!"

- போதையனார்.

இதன் பொருள்:

முக்கோணத்தின் கர்ணம் கண்டுப்பிடிக்க, நீளத்தை எட்டால் வகுத்து, கிடைப்பதை நீளத்தில் கழித்து, செங்குத்து உயரத்தில் பாதியை இதோடு சேர்த்தால் கர்ணம் கிடைக்கும்.

உதாரணம்:

முக்கோணத்தின் நீளம் 8; உயரம் 6; இதன் கர்ணம் எத்தனை?

நீளத்தை எட்டால் வகுத்தால் கிடைப்பது 1, இதை நீளத்தில் கழித்தால் 8 - 1 = 7; இத்துடன் உயரத்தில் பாதியை

சேர்த்தால் 7 + 3 = 10; இதுதான் கர்ணத்தின் அளவு ஆகும்.

இதை பித்தகோரஸ் சூத்திரத்தின் மூலம் கண்டுபிடிக்கலாம்.

(நீளம்)$^2$+( உயரம்)$^2$= (கர்ணம்)$^2$.

$8^2+6^2$=(கர்ணம்)$^2$

64+36=(கர்ணம்)$^2$

100= (கர்ணம்)$^2$

ஆக ,கர்ணம்= 10.

போதையனார் தேற்றம் மிக எளிதாய் இருக்க நாம் பித்தாகரஸ் தேற்றத்தை படித்து வருகிறோம்.

போதையனாரின் கணித முறையைக் கொண்டுதான், அக்காலத்தில் குன்றுகளின் உயரம் மற்றும் உயரமான இடத்தை அடைய நாம் நடந்து செல்லவேண்டிய தூரம் போன்றவைகள் கணக்கிடப்பட்டுள்ளன.



07

23.11.2020

# துணைக்கால்

கா சா தா

கொம்புக்கால் :

ஊ, கௌ, சௌ

மடக்கு ஏறுகீற்றுக் கால்:

ணூ, தூ, நூ

ஒற்றைக்கொம்பு:

கெ, நெ, செ

இரட்டைக்கொம்பு:

கே, நே, சே

இணைக்கொம்பு/சங்கிலிக்கொம்பு:

கை, சை, நை

சாய்வுக்கீற்று:

ஏ

இறங்கு கீற்று :

பு, சு, வு

மடக்கு ஏறு கீற்று:

ணு, து, நு

பின்வளைகீற்று:

மேல்விலங்கு:

கி, தி, பி

கீழ்விலங்கு:

மு, ரு, கு

இறங்குகீற்றுக் கீழ்விலங்குச் சுழி:

சூ, பூ

மேல்விலங்குச் சுழி:

கீ, தீ, ரீ

கீழ்விலங்குச் சுழி:

மூ ரூ

பிறைச்சுழி:

ஆ.

# 08

# 24.11.2020

## கடலின் வேறு பெயர்கள்

அரலை, அரி, அலை, அழுவம், அளக்கர், அளம், ஆர்கலி, ஆலந்தை, ஆழி, ஈண்டுநீர், உரவுநீர், உவர், உவரி, உவா, ஓதம், ஓதவனம், ஓலம், கயம், கலி, கார்கோள், கிடங்கர், குண்டுநீர், குரவை, சக்கரம், சலதரம், சலதி, சலநிதி, சலராசி, சுழி, தாழி, திரை, துறை, தெண்டிரை, தொடரல், தொன்னீர்,

தோழம், நரலை, நிலைநீர், நீத்தம், நீந்து, நீரகம், நிரதி, நீராழி, நெடுநீர், நெறிநீர், பரப்பு, பரவை, பரு, பாரி, பாழி, பானல், பிரம்பு, புணர்ப்பு, புணரி, பெருநீர், பௌவம், மழு, முந்நீர், வரி, வலயம், வளைநீர், வாரி, வாரிதி, வீரை, வெண்டிரை, வேழாழி, வேலை.



09

25.11.2020

# நூல்-கணக்கதிகாரம்

வட்ட வடிவ நிலத்தின் பரப்பளவை காண, "கணக்கதிகாரம்" என்ற தொன்மையான நூலில் புலவர் காரிநாயனார் அவர்கள் செய்யுள் வடிவில் விளக்கியுள்ளார்.

" வட்டத்தரை கொண்டு விட்டத்தரைத் தாக்க சட்டெனத் தோன்றுங் குழி "

விளக்கம்:

வட்டத்தரை என்பது வட்டத்தின் சுற்றளவில் பாதி ஆகும். விட்டத்தரை என்பது விட்டத்தில் பாதி ஆகும்.ஆக வட்டத்திரையும் விட்டத்திரையும் பெருக்கி வரும் விடையே வட்டத்தின் பரப்பளவு ஆகும்.

எடுத்துக்காட்டு:

விட்டம்=14; வட்டத்தின் சுற்றளவு=44 .

விட்டத்தில் அரை = ஆரம்(r) = 7.

வட்டத்தில் அரை= 44/2 =22.

ஆக இரண்டையும் பெருக்கினால்

22 X 7 = 154

வட்டத்தின் பரப்பு = 154

தற்கால சூத்திரப்படி

வட்டத்தின் பரப்பு = $\pi$ r2 = 22 / 7 X 7X7 = 154



10

01.12.2020

# கல்வெட்டு

பண்டைக் காலத்தில் நீண்ட காலம் அழியாதிருக்க வேண்டும் எனக் கருதப்பட்ட செய்திகள் கற்களில் வெட்டப்பட்டன. இவ்வாறு கல்லில் பொறிக்கப்பட்ட செய்தியே கல்வெட்டு எனப்படுகின்றது.

கல்வெட்டுக்கள், பெரும்பாலும் பொதுமக்கள் பார்ப்பதற்காக வெட்டப்படுவதால் இவை பொது இடங்களிலேயே அதிகம் காணப்படுகின்றன. கோயில்கள், குகைகள், பொது மண்டபங்கள், வெற்றித் தூண்கள், நடுகற்கள் எனப்படும் இறந்தோர் நினைவுக் கற்கள் என்பவற்றில் கல்வெட்டுக்களைக் காணலாம்.

சோழர் காலத் தமிழை அறியக் கல்வெட்டுகள் பேருதவி செய்கின்றன.

‘வடசொற்களை எழுதினால், வடமொழி எழுத்துகளை அகற்றிவிட்டு, தமிழ் எழுத்துகளால் தமிழ் மொழி மரபுப்படி எழுத வேண்டும்’ என்ற இலக்கண வரையறையை நன்னூலில் காணலாம்.

‘பதவியல்’ என்று ஓர் இயலே அந்நூலில் உள்ளது.

சோழர் காலக் கல்வெட்டுகளில் வடமொழிச் சொற்கள் தமிழாக்கம் செய்யப் பட்டிருத்தலைக் காணலாம்.

வடசொற்கள் - கல்வெட்டுச் சொற்கள்

ஏகபோகம் - ஒரு பூ

தாம்பூலம் - சுருளமுது

கர்ப்பக்கிரகம் - உட்கோயில், அகநாழிகை

பரிவர்த்தனை - தலைமாறு

பரிவட்டம் - சாத்துக்கூறை

நைவேத்யம் - அமுதுபடி

அவிர்பலி - தீயெறிசோறு

கும்பாபிஷேகம் - கலசமாட்டுதல்.



11

03.12.2020

# சித்தர்கள்

சித்தர்கள் பண்டைய தமிழகத்தின் அறிவியலாளர்கள் ஆவர்.அவர்கள் வானியல், மருத்துவம், வேதியியல் ஆகிய துறைகளில் ஆராய்ச்சி செய்துள்ளனர்.

* 96 உடல் தத்துவங்களாகப் பிரித்து மனித உடற்கூறியலை ஆராய்ந்துள்ளனர்.

*. நோயியல் துறையில் மனிதர்களுக்கு ஏற்படும் நோய்கள் 4448 என்று வரையறுத்துள்ளனர்.

அவைகள்:

1. மூச்சுறுப்புகளில் ஏற்படும் நோய்களை கப நோய்கள் எனவும்.

2. செரிமான உறுப்புகளில் ஏற்படும் நோய்களைப் பித்த நோய்கள் எனவும்.

3. ஏனைய நோய்களை வாத நோய்கள் எனவும் வகைப்படுத்தியுள்ளனர்

* மருந்தியல் துறையில், மருந்துகளை 32 வகை உள்மருந்துகள், 32 வகை வெளி மருந்துகள் என வகைப்படுத்தி உள்ளனர்.மருந்தியலில் பல நூல்களை படைத்துள்ளனர்.

* நரம்பியல் துறையில், வர்ம மருத்துவம் சித்தர்கள் கண்டுபிடித்த நரம்பியல் மருத்துவம் ஆகும்.

* வேதியியல் துறையை வாதம் என்ற பெயரில் ஆராய்ந்துள்ளனர். போகர்

வேதியியல் துறையில் ஆழமான விரிவான ஆய்வுகளைச் செய்தவர். செயற்கையாக வேதிப்பொருள்களாகிய தாதுக்களைத் தயாரிக்கும் முறைகளைக் கண்டுபிடித்தனர். அதற்கு *வைப்புமுறை* என்று பெயரிட்டனர். சித்தர்கள் எழுதிய வாதநூல்கள் அனைத்தும் வேதியியல் துறையில் அவர்களின் ஆழமான ஆராய்ச்சியை வெளிப்படுத்துபவை ஆகும்.

* விண்பொறியியல் துறையில் போகர் ஆராய்ந்து அதன் பயனாக

பஞ்சபூதத்தால் செய்த ஆகாயப்புரவி என்ற விமானத்தைக் கண்டுபிடித்து சீனாவுக்குப் பயணம் செய்திருக்கிறார். *ஆகாயப்புரவி* என்ற விமானம் பற்றிய குறிப்புகளை போகர் *ஏழாயிரம்* என்ற நூலின் மூலம் அறியலாம்.

* உடல், மனம், அறிவு வளர்ச்சிக்குப் பயன்படும் வகையில் யோக ஆய்வுகளைச் செய்து யோக நூல்களையும் படைத்துள்ளனர்.

* மெய்யியல் என்னும் தத்துவத்துறையிலும் ஆய்வுகளைச்

செய்து ஆய்வுச் சிந்தனைகளை ஞானநூல்களாகப் படைத்துள்ளனர்.

மொத்தத்தில் சித்தர்கள் பலதுறை வல்லுநர்களாக விளங்கினர்.



12

04.12.2020

# தமிழ் மருத்துவர்கள்

சங்க கால தமிழ் மருத்துவர்கள் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டனர். அறம் சார்ந்த முறையில் சிகிச்சை அளிப்பதால் அறவோன் என நற்றிணை, மெய்மையின் அடிப்படையில் சிகிச்சை வழங்குவதால் சான்றவர், துயரத்தை

நீக்குவதால் அரஞர், நோய்களைக் களைவதால் களைநர் என கலித்தொகை, அறுவை சிகிச்சை மூலம் உடலில் தங்கியுள்ள அம்பு, வாள் போன்ற உலோகங்களை நீக்குவதால் சல்லியன் என திருமுக்கூடல் கல்வெட்டு, கசப்பான மருந்தைக் கூட தேன் சுவை மருந்தாக மாற்றி தருவதால் மருந்தாளர் என பெருங்கதை, மருந்துகளை உரைத்து வழங்குவதால் மருந்துறையோன், இன்னுயிரை காப்பதால் இன்னுயிர்

போத்தர், தங்கள் அறிவுத் திறமையால் பல்வேறு இயற்கை பொருட்களை மருந்தாக மாற்றி தருவதால் அறிவனார் என சங்க நூல்கள் மருத்துவர்களின் வேறு பெயர்களை குறிப்பிடுகின்றன.

மருத்துவமனை மருத்துவனில்லம் என்றும் ஆதுரகச் சாலை என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதுரர் என்பவர் ஆதரவு அற்றவர். நோயினால் பீடிக்கப்பட்டவர். நோயினால் பீடிக்கப்பட்ட ஆதுரர் களை தங்கவைத்து கவனிக்கும் இடம் என்பதால்

ஆதுரகச்சாலை என்று அழைக்கப்பட்டது. மருத்துவத்திற்காக வருடாந்திர பட்ஜட் போட்டு நிதி ஒதுக்குவது போல் ஆதுரகச் சாலையில் ஓர் ஆண்டுக்கான மருந்துகள் இருப்பில் வைக்கப்பட்டிருந்ததை சுந்தர சோழ விண்ணாசுர ஆதுரகச்சாலை பற்றிய திருமுக்கூடல் கல்வெட்டு குறிப்பிடுகிறது.

அறிவியல் மருத்துவம்

சங்ககால தமிழ் மருத்துவர்கள் போரில் அடிபட்ட காயங்களை தழும்பின்றி

ஆற்றும் திறமை பெற்றிருந்தார்கள். “மருந்துகொள் மருந்தின் வாழ்வடு மயங்கி வடுவின்றி வரிந்த யாக்கையான்” என புறநானூறு குறிப்பிடுகிறது. அத்திப்பாலைத் தடவி வடுவின்றி புண்களை ஆற்றும் பிளாஸ்டிக் சர்ஜரி சிகிச்சை முறையை தமிழ் மருத்துவத்தில் பயன்படுத்திய வழக்கம் கண்டறியப்பட்டுள்ளது.

பல்வேறு இலக்கிய நூல்களில் புண்களுக்கு பஞ்சு வைத்து கட்டி புண்களை ஆற்றுதல், உடலில் சென்று

விட்ட உலோகத் துண்டுகளை காந்தம் மூலம் பிடித்து வெளியேற்றுதல், நோயாளிகள் தங்க வைக்கப்பட்டு இருக்கும் இடத்தில் வெண்கடுகை எரித்து புகை மூட்டுதல், வெண்கடுகுடன்நெய்யை சேர்த்து அரைத்து கிருமிகள் தொற்றா வண்ணம் நோயாளி உடல் மற்றும் அவர் தங்கியிருந்த இடங்களை சுத்தம் செய்தல் என தமிழ் மருத்துவம் அறிவியல் சார்ந்த மருத்துவ

முறையாக தொன்று தொட்டு திகழ்ந்து வருகிறது.

சித்தர்கள் கண்ட மெய்

அறிவியல் பல்வேறு ஓலைச் சுவடிகளிலும், குரு-சீடர் உபதேச மாகவும் சொல்லி வைத்தது, சித்த மருத்துவ நூற்களாக இப்போது தொகுக்கப்பட்டுள்ளன. மெய்யியல் தமிழ் மருத்துவமே சித்த மருத்துவமாக இந்தியா மட்டுமின்றி பல்வேறு நாடுகளிலும் பிரபலமடைகிறது. சித்தமருத்துவம் நமது தாய்

மருத்துவம். தாய் தன் குழந்தையை கண்ணும் கருத்துமாக பார்த்துக்கொள்வது போல் இம்மருத்துவம் நம்மை என்றென்றும் காக்கும்.



13

05.12.2020

# சித்த மருத்துவம்

தமிழர்களின் தாய் மருத்துவம் "சித்த மருத்துவம்"

கத்தியம் என்பது ஒரு மரபு. இம்மரபின் முதல் சித்தர் அகத்தியர். உடல் கூறு, உடல் செயலியல், அறுவை, மனநோய், மந்திரம், தந்திரம், மருத்துவம், யோகம், நோய் கணிப்பு, தத்துவம், இலக்கணம் என அகத்தியர் பல்வேறு தமிழ்

அறிவியல் தந்ததால் முதல் சித்தராக வணங்கப்படுகிறார். கம்போடியா, வியட்நாம் நாடு களிலும் அகத்தியரை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அகத்தியர் பிறந்த மார்கழி மாத ஆயில்ய நட்சத்திரம் அன்று சித்த மருத்துவ தினம் கொண்டாடப்படுகிறது. தமிழ் மருத்துவமாம் சித்த மருத்துவம் தொடாத அறிவியலே இல்லை. பண்டைய தமிழ் மருத்துவர்கள் அறுவை சிகிச்சை, உறுப்பு மாற்று,

பிளாஸ்டிக் சர்ஜரி போன்றவற்றில் சிறப்புடன் விளங்கினர்.

அறுவை சிகிச்சை

7ம் நூற்றாண்டில் மங்களபட்டி என்ற ஊரில் ராஜாவின் மகள் பிரசவிக்க முடியாமல் தலை திரும்பி கஷ்டப்படும்போது குழந்தையை உயிருடன் எடுத்து தர மங்களை என்ற மருத்துவச்சி முன்வந்தாள். தாயை ஒரு அறையில் வைத்து மகிழ்வூட்டும் அபினி, சாராயம் போன்ற மருந்துகளை கொடுத்து, வயிற்றைக் கிழித்து

குழந்தையை உயிருடன் எடுத்து பழையபடி வயிற்றை தைத்து புண்ணை ஆற்றி தாயை பிழைக்க வைத்து அறுவை சிகிச்சை செய்தார். இதனை "கொங்குசதகம்" என்ற நூல் குறிப்பிடுகிறது.

அறுவை சிகிச்சை தொடரும்...



14

06.12.2020

# சித்த மருத்துவம்

போரினால் ஏற்பட்ட காயங்களை ஆற்ற வீரர்களின் மார்பு சதையை வெள்ளி ஊசி கொண்டு தையல் போடுவது தமிழர் வரலாற்றில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஊசி தோலின் வெளிப்புறத்திலிருந்து காயத்தின் உள்ளே சென்று குத்தி தைத்து வெளியே வரும்போது வெள்ளி ஊசியின் நிறம்

சிவப்பாக மாறி இருக்கும். ஊசியின் நுனியில் தையல் நாரும் ஒட்டி வரும். இது பார்ப்பதற்கு மீனைக் கொத்திக் கொண்டு நீரில் இருந்து எழும் சிரல் என்ற மீன்கொத்திபோல இருக்கும் என்பதை “மீன்தேர் கொட்பிற் பனிக்கய மூழ்கிச் சிரல்-பெயர்ந் தன்ன நெடுவெள்சி” என்று பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது.

தமிழ் மருத்துவத்தில் பழங்காலத்தில் வெட்டுப்பட்ட உறுப்புகள் மற்றும்

சதையையும் தைக்கும் அறுவை தையல் முறை சிகிச்சை இருந்தது என்பதை அறிய முடிகிறது.மகளிர் செவிலியர் “மெல்இயல் மகளிர் நல்அடி வருட, செம்முகச் செவிலியர் கைம்மிக குழிஇ” என நெடுநல் வாடையும், “அஞ்சுவரு நோயோடு துஞ்சாததேனே” என அகநானூறும் அழகிய இளம்பெண்கள் அரசியருக்கு உடலை மென்மையாக பிடித்து வருடும் தொக்கண சிகிச்சை செய்து தூங்க

வைத்தனர் என தமிழ் மருத்துவத்தின் சிறப்பை வெளிப் படுத்துகிறது.

“நல்லாரிழிது சோ கவளம் வைத்துப் புதுமுகன் பாவை மார்பி ணெய்கிழி பயிலச் சேர்த்தி” என சீவக சிந்தாமணி பெண் செவிலியர்கள், காயமடைந்த போர்வீரர்கள் புண் ஆற்ற நெய்யால் செய்யப்பட்ட மருந்துகளை துணியில் தடவி கட்டு போட்டனர் எனக் குறிப்பிடுகிறது. மருத்துவப் புலவர்கள் சங்க காலத்தில் பல மருத்துவப்

புலவர்கள் இருந்தனர். கடுகுபெருந்தேவனார், காபட்டனார், வெள்ளெருக்கிலையார், காரியாசான், மதுரை வேலாசான், சல்லியக்குமரன், மருத்துவன் தாமோதரனார், மருத்துவ நல்லச்சுதனார் போன்ற மருத்துவப் புலவர்கள் மருத்துவம் மற்றும் அறுவை சிகிச்சை செய்பவர்களின் மருத்துவ குறிப்புகளை பாடல்களாக தங்கள் நூல்களில் எழுதியுள்ளனர்.

---::: :::---

15

07.12.2020

# ஆமைகள்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் இருந்த சோழர்கள், வேறு காரணத்திற்காக ஆமைகளைக் கொண்டாடி இருக்கிறார்கள்.

கடல் வழிப்பயணத்துக்கு ஆமைகளே சிறந்த வழிகாட்டிகள் என்பதை அவர்கள் அறிந்து இருந்ததால்,

அந்தக்காலத்தில் ஆமைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

எந்த நவீன போக்குவரத்து வசதியும் இல்லாத காலமான ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய அந்த நேரத்தில், தமிழர்கள் 2,500 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கம்போடியா உள்பட தென் கிழக்கு ஆசிய நாடுகளுக்கு மிக எளிதாகக் கடல் கடந்து சென்று வாணிபம் நடத்தியதோடு, அங்கே தங்களது கலாசாரத்தையும் பதித்தனர்.

இந்த மகத்தான சாதனை புரிய சோழர்களுக்குப் பேருதவியாக இருந்தவை ஆமைகள் என்பது வியப்புக்கு உரிய செய்தி.

கடல் ஆமைகளிடம் ஒரு விஷேச குணம் உண்டு.

அவை, தாங்கள் பிறந்த கடற்கரைப் பகுதி எது என்பதை மறக்காமல் இருக்கும். இரை தேடுவதற்காக பல ஆண்டுகளாக கடலின் வேறு பகுதிகளில் எல்லாம் சுற்றி அலைந்தாலும், அந்த ஆமைகள்

இனப்பெருக்க காலத்தில் மறக்காமல் தாங்கள் பிறந்த அதே கடற்கரைக்கு வந்தே முட்டைகளை இடும்.

கடலின் நீரோட்டத்தையும், தாங்கள் பிறந்த இடத்தின் காந்த அலைகளையும் நினைவில் வைத்துக் கொண்டு, ஆமைகள் இவ்வாறு பயணம் மேற்கொள்வதாக சமீபத்தில் ஆய்வு மூலமாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

ஆமைகளின் இந்தப் போக்கு, அந்தக்கால சோழர்களுக்கு அப்போதே அத்துப்படியாக இருந்தது.

ஆமைகள், கடல் நீரோட்டத்தை நன்றாக அறிந்து கொண்டு, அந்த நீரோட்டத்தில் தங்களை இணைத்துக் கொள்ளும். பின்னர் நீந்திச் செல்ல வேண்டிய அவசியம் இல்லாமலேயே, அந்த நீரோட்டத்துடன் பயணம் மேற்கொண்டு தங்கள் இலக்கை அடையும் என்பதையும் சோழர்கள் அறிந்து இருந்தார்கள்.

இந்த ரகசியத்தின் மூலம், அவர்கள் தங்களது கடல் பயணத்துக்கு ஆமைகளை வழிகாட்டியாகக் கொண்டு

கடலில் மிக எளிதாக பல மைல் தூரம் பெரிய படகுகளில் பயணித்தார்கள்.

கீழைக்காற்று எந்தத் திசையில் வீசுகிறது? ஆமைகள் செல்லும் கடல் நீரோட்டம் எப்படி இருக்கிறது? என்பதை எல்லாம் மிகச்சரியாகக் கணக்கிட்டு, அதன் அடிப்படையில் அவர்கள் படகைச் செலுத்தும் போது, படகு அந்த நீரோட்டத்துடன் இழுத்துச் செல்லப்பட்டு இலக்கை அடைந்துவிடும்.

இந்த நுணுக்கத்தின் அடிப்படையிலேயே அவர்கள் கடலில் பயணம் மேற்கொண்டு அரிய பல சாதனைகளை அரங்கேற்றினார்கள்.



16

08.12.2020

# தமிழர்களின் வான் ஆராய்ச்சி

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கும்

அளப் பருந்தன்மை வளப் பெருங் காட்சி

ஒன்றனுக்கொன்று நின்றெழில் பகரின்

நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன

இன்னுழை கதிரின் துன் அணுப்புரையச்

சிறிய வாசகப் பெரியோன் தெரியின்

-மாணிக்க வாசகர்

பேரண்டமானது எண்ணிறந்த கோள்களை உடையது. அவற்றின் தன்மையை முற்றிலும் தெரிந்து கொள்ள முடியாது. அவை அழகும் சீரமைப்பும் வியக்கத்தக்கவை. கோடிக்கணக்கில் அவை விரிந்து போகின்றன. என்பவை இந்த பாடலின் கருத்தாகும்.

இப்பாடலின் மூன்றாம் நான்காம் வரிகள் சூரியனது ஒளிக்கதிர் இருண்ட

அறையில் செல்லும் போது அவற்றில் அலைந்து திரிந்து துசுக்கள் போல பேரண்டத்தில் அண்டப் பொருட்கள் கோடிக் கணக்கில் உள்ளன என்று கூறுகிறது.



17

09.12.2020

# தொலைநோக்கி

16-ம் நூற்றாண்டில் தொலைநோக்கியை கலிலியோ கண்டுபிடித்த பின்தான் சனிக்கோளும் அதன் வளையங்களும் கண்டுபிடிக்கப்பட்டன. ஆனால் அதற்கு பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தமிழ் இலக்கியங்களில் சனிக்கோள் புகைந்து, வளையம் போல அமைய

அப்புகை அதனைச் சூழ்ந்து அமைந்திருப்பதாக எழுதியுள்ளனர் நம் தமிழர். பின்வறுமாறு இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.

கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்

விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினும்…

-நடுகாண்காதை



# 18

## 10.12.2020

# பண்டையத் தமிழர்களின்

# வான் ஆராய்ச்சி

சுடர்வதாகி எழும்பியங்கு தூபமான காலமே

இடர்வதாயிப் புவியும் விண்ணும் ஏகமாய் அமைந்தபின்

படர்வதாகி நின்றவாதிப் பஞ்சபூத

மாகியே

அடர்வதாகி அண்டம்யாவும் ஆள்வதாக

நின்றதே

-பதிணென் சித்தர் பாடல்கள்

பொருள்:

அதாவது, ஒளிமிகுந்த சுடர்விட்ட ஒன்று இடர்பட்டுச் சிதறிய பூமிகளும், கோள்களும் உண்டாகின.மூல பிரகிருதியானது பூமியின் பஞ்ச பூதங்களாகி எங்கும் அடர்ந்து பரவி

நின்று அண்டங்களை எல்லாம் ஆள்வதாக நின்றது.

இப்புவி அத்திப்பழம் போல் பேரண்டம், அதற்குள் அமைந்த வித்துக்கள் போல சிற்றண்டங்கள், பேரண்டம் ஆயிரத்தெட்டு கூடியது ஒருபுவனம்,

புவனம் 2214 கூடியது ஒரு சாகரம், சாகரம் ஏழு கூடியது ஒரு பதம், இப்படி 814 பதம் கூடியது ஒரு பிரபஞ்சம் என பெரிய ஞானக் கோவையில் பண்டைத்

19

12.12.2020

# வீராணம் ஏரி

"வீராணம் ஏரி" தமிழ்நாட்டின் கடலூர் மாவட்டம் , காட்டுமன்னார்கோயில் அருகே லால்பேட்டை தொடங்கி சேத்தியாத்தோப்பு அருகில் உள்ள பூதங்குடி கிராமத்தில் முடிவடைந்து இதனுடைய அதிகப்படியான நீரானது

சேத்தியாத்தோப்பில் செல்லும் வெள்ளாற்றில் கலக்கிறது.

இந்த ஏரி 15கிமீ நீளமும்,

5கிமீ அகலமும் , 47.5அடி ஆழமும் கொண்டது.இதன் கொள்ளளவு 1445 மில்லியன் கனஅடி ஆகும். இந்த ஏரியால் 49,440 ஏக்கர் விளைநிலங்கள் பாசன வசதிப் பெற்று விவசாயப் பணிகள் நடந்து வருகின்றன.

விசயாலயச் சோழனின் பேரனான முதலாம் பராந்தகன் சோழப் பேரரசுக்கு

அடித்தளம் அமைத்தவர் ஆவார்.தில்லை நடராசர் கோயிலுக்கு தங்கக் கூரை அமைத்து புகழ்பெற்றவர்.

இவருக்கு சோழ சிகாமணி,சூர சிகாமணி,வீர நாராயணன் என்னும் வேறு பெயர்களும் உண்டு.

பராந்தகன் காலத்தில் வடக்கே ரெட்டை மண்டலத்து ராச்ரக்கூட மன்னர்கள் வலிமை பெற்று வந்தனர்.அவர்கள் அவ்வப்போது போரிட்டு பல நாடுகளை வென்றிருந்தனர்.

இதனால் தென்னாட்டை நோக்கி அவர்கள் படையெடுத்து வரக்கூடும் என்று கணித்திருந்த பராந்தகன் தன் மூத்த மகனாகிய ராஜாதித்தனை ஒரு பெரும்படையுடன் திருமுனைப்பாடி நாட்டுக்குச் செல்ல பணித்தார்.அது நடுநாடு, தென்னாற்காடு நாடு என அழைக்கப்பட்டது.

இந்தப்படை வடக்கு நாட்டின் படையை எதிர்கொள்ள ஆயத்தமாக இருந்தக் காத்திருப்பு காலத்தில்

இராசாதித்தனுக்கு ஒரு யோசனை."வடகாவிரி" (கொள்ளிடம்) ஆற்றின் நீர் வீணாகக் கடலில் கலப்பதைத் தடுக்க எண்ணினார் தனது வீரர்களுக்கு ஏரியை வெட்ட உத்தரவிட்டார்.

ஏரி வெட்டும் பணி நிறைவடையாத நிலையில் தக்கோலம் போருக்கு ஒரு பகுதி வீரர்களுடன் புறப்படும் போது ஏரியை வெட்டி முடித்ததும் தன் தந்தையின் வீரப் பெயர்களின் ஒன்றான

"வீர நாராயணன்" பெயரைச் சூட்ட வேண்டும் என்று கூறிவிட்டுச் சென்றார்.

போரில் இராசாதித்தன் யானை மீது அமர்ந்து போரிட்ட நிலையிலேயே வீரமரணம் அடைந்தார்.இதன் காரணமாக

இராசாதித்தன் "யானை மேல் துஞ்சிய தேவன்" என அழைக்கப்பட்டார்.

1011-1037 ஆண்டுகளுக்கு இடையே ஏரி வெட்டி முடிக்கப்பட்டது.

இராசாதித்தன் விருப்பப்படியே ஏரிக்கு "வீர நாராயணன் ஏரி" என்று பெயரிடப்பட்டது. காலப்போக்கில் "வீராணம் ஏரி" என்று மருவியது.

இதன் தொடர்ச்சியாக காட்டுமன்னார் கோயிலில் பெருமாள் கோயில் ஒன்றைக் கட்டி அதற்கு "வீர நாராயணன் பெருமாள்" என்று பெயர் சூட்டப்பட்டு வழிபாட்டுத் தலத்தைச் சோழ மன்னன் உருவாக்கினார்.

கல்கி எழுதிய "பொன்னியின் செல்வன்" என்ற புதினம் இவ்வேரியின் கரையில் இருந்துத் தொடங்குகிறது.



20

13.12.2020

# இலக்கியத்தில் தமிழர்

# கட்டடக்கலை

வீடுகள் அமைப்பதில் சில முறைகள் அக்காலத்தில் இருந்தன என்று குறிப்பிடுகிறார் டாக்டர் உ. வே. சாமிநாதையர். நெடுநல்வாடையில்: "பெரும் பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து" என்பதனால்

அவரவர்களுக்கேற்றபடி மனைகள் அமைக்கும் வழக்கம் இருந்ததென்பதை அறியலாம். வீடுகள் கட்டுவதற்கு கடைக்கால் (அத்திவாரம்) போடும் காலம் நெடுநல்வாடையில் காணப்படுகிறது. கோபுரங்களும், வாயின் மாடங்களும், நிலாமுற்றங்களும், அறைகளும் அமைக்கப்பட்டன. வீடுகளின் நிலைகளிற் சித்திர வேலைகள் செய்யப்பட்டிருந்தன. மாடங்களாகவே சில வீடுகள் கட்டப்பட்டிருந்தன. காற்று

ஓட்டத்திற்காக வீட்டின் சுவர்களிற் பலவகைச் சாளரங்கள் வைப்பதுண்டு. இவை காலதர் என்று கூறப்படும். கால் = காற்று, அதர் = வழி. அதாவது காற்றுப் போகும் வழி என்று பொருள்.



21

14.12.2020

# பொறியியல் வல்லுநர்

நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்

தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்

பெரும்பெயர் மன்னர்க் கொப்ப

மனைவகுத்து என்று மேலும்

கூறப்படுகிறது.

இன்றைய பொறியியல் வல்லுநர்கள் போல் அன்றும் கட்டடக்கலைத் திறன் வல்ல நூலறி புலவர் இருந்தனர் என்பதை நெடுநல்வாடையிலிருந்து அறிய முடிகிறது. கட்டடக்கலை நூல்களும் இருந்தன என்பது அறியக் கிடக்கிறது.

சிற்ப நூலை (கட்டடக் கலை நூலை) நன்கு துணுக்கமாக அறிந்த புலவர்கள் நூலை நேரே பிடித்துத் திசைகளை மாறாது குறித்துக்கொண்டு அவ்வத்

திசைகளில் நிற்கும் தெய்வங்களையும் குறைவறப் பார்த்து அரச மரபினருக்கு ஏற்ப மனையை வகுத்தனர் என்கிறார் நக்கீரர்.

நூலைப்பிடித்து அளவும் திசையும் பார்க்கும் வழக்கம் இன்றும் கொத்தனார்களிடையே உள்ளது. வாயுமூலை, ஈசானியமூலை, அக்கினிமூலை, நிருதிமூலை என்று மனைநூலில் திசைகளும்

தெய்வங்களும் கூறப்படுவது இங்கே நினைவுகூரத் தக்கது.

இப்பகுதிக்கு உரை எழுதுங்கால் உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர் 'மனை வகுத்து' என்பதற்கு மட்டும், "மனைகளையும் வாயில்களையும் மண்டபங்கள் முதலியவற்றையும் கூறுபடுத்தி" என்று பதசாரம் எழுதுகிறார். அரசர்க்குரிய கட்டடத்தின் உட்பிரிவுகள் கூறப்படுகின்றன. "மனையை வாயில்,

மண்டபம், முற்றம், கூடம் முதலியவாகக் கூறுபடுத்து" என இன்னும் தெளிவாக விளக்குகிறார் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார்.

நெடுநல்வாடையே மேலும் கூறுகிறது :

ஒருங்குடன் வளைஇ ஓங்குநிலை வரைப்பின்

பருவிரும்பு பிணித்துச் செலவாக்குரீ இத்துணைமாண் கதவம் பொருத்தி யினைமாண்டு நாளொடு பெயரிய

கோளமை விழுமரத்துப் போதவிழ்

குவளைப் புதுப்பிடி காலமைத்துத்

தாழொடு குயின்ற போரமை புணர்ப்பிற்

கைவல் கம்மியன் முடுக்கலிற்

புரைதீர்ந்து

ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை

வென்றெழு கொடியொடு வேழஞ்

சென்றுபுகக்

குன்று குயின்றன்ன வோங்குநிலை

வாயில்

முற்றம், கூடம், மண்டபம் என்னும் உட்பிரிவுகளை எல்லாம் ஒருசேரக் கவிய வளைத்து உயர்ந்த நிலையையுடைய மதில் என வருகிறது.

கட்டவேண்டிய இடத்தை எல்லாம் முன்னதாக அளந்துகொண்டு இன்ன இன்ன இடத்தின்கண் இன்ன இன்ன கோள்கள் உள்ளன என்பது முதலியவற்றை அறிந்து எந்தெந்தத் திசையில் எந்தெந்தத் தெய்வம் நிற்பதால் நன்மை விளையுமோ

அவற்றை அறிந்து நியமித்தபின் தொடங்குக என்றவாறாயிற்று.

திசை மரபு

தெற்கு இயமன், வடக்கு குபேரன்,கிழக்கு இந்திரன், மேற்கு வருணன், தென்கிழக்கு அக்கினி, தென்மேற்கு நிருதி, வடமேற்கு வாயு, வடகிழக்கு ஈசானன் என்பது மனைநூல் கூறும் "திசைக்கடவுளர் விளக்கம்" . இத்தெய்வங்கள் நிற்கும் நிலைகளை அறிந்து கட்டடம் அமைப்பது நக்கீரர்

காலத்தும் வழக்கமாக இருந்தமை அறியப்படுகிறது. -

‘நூலறி புலவர்' என்ற தொடருக்குச் சிற்ப நூலையறிந்த தச்சர் என நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம்

காணத்தக்கது. நூலாவது 'கிருஹ நிர்மாண சாஸ்திரம் (வீடு கட்டுதல் பற்றிய நூல்) என்பார் வை. மு. கோபால கிருஷ்ணமாசாரியார்.



22

15.12.2020

# பாறைக் கோயில்கள்

கி.பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பல்லவப் பெருவேந்தனான மகேந்திர வர்மன் என்னும் அரசன் ஆட்சி செய்தபோது (கி.பி.600 முதல் 630 வரை) கோயிற் கட்டடக் கலையில் புது மாறுதல் ஒன்று நிகழ்ந்தது.

இவர் காலத்தில் பெரிய கற்பாறைகளைக் குடைந்து எழில் வாய்ந்த குகைக் கோயில்களை (பாறைக் கோயில்கள்) அமைக்கும் வழக்கம் ஏற்பட்டது.

கற்பாறைகளைச் செதுக்கித் தூண்களையும் முன் மண்டபத்தையும் அப்பால் கருவறை எனப்படும் திருவுண்ணாழிகையையும் அமைக்கும் பாறைக் கோயில் முறை இவன் காலத்திலேயே ஏற்பட்டது.

இன்றைய தென்னார்க்காடு மாவட்டம் விழுப்புரம் தாலுகாவைச் சேர்ந்த மண்டகப்பட்டு என்னும் ஊரில் மகேந்திர வர்மன் அமைத்த பாறைக்கோயில் ஒன்று உள்ளது.

இதே மண்டகப்பட்டுக் குகைக்கோயிலில் உள்ள வடமொழிச் சாசனம் ஒன்று,

"செங்கல், சுண்ணம், மரம், உலோகம் முதலியவை இல்லாமலே பிரம, ஈசுவர, விஷ்ணுக்களுக்கு விசித்திர சித்தன்

(மகேந்திர வர்மனின் பெயர்) என்னும் அரசனால் இக்கோயில் அமைக்கப்பட்டது" என்று கூறுகிறது.

மண்டகப்பட்டுத் தவிர இதே மகேந்திர வர்மன் குடைந்த பாறைக் கோயில்கள் சென்னையை அடுத்த பல்லாவரத்திலும், காஞ்சியை அடுத்த மற்றொரு பல்லாவரத்திலும், மகேந்திரவாடி, சீயமங்கலம், மேலைச்சேரி, வல்லம் மாமண்டூர்,

தளவானூர், சித்தன்னவாசல் முதலிய ஊர்களிலும் உள்ளன.

இவருக்குப் பின் இவருடைய மகனான மாமல்லன் நரசிம்மபல்லவனும், அவனுக்குப் பின் பரமேசுவரவர்மன் முதலியவர்களும் மாமல்லபுரம், சாளுவன் குப்பம் முதலிய இடங்களில் பாறைகளைக் குடைந்து குகைக்கோயில்களையும் தேர்க்கோயில்களையும் உருவாக்கினர்.



23

16.12.2020

# சிற்பக் கலை

சிற்பம் என்பது ஒரு முப்பரிமாண கலை பொருள் ஆகும். இது கடினமான அல்லது நெகிழ்வுத் தன்மை கொண்ட பொருள்களுக்கு உருவம் கொடுப்பது மூலம் உருவாக்கப்படுகிறது. பொதுவாகச் சிற்பங்கள் செய்வதற்காகப் பயன்படும் பொருள்களுள் கற்கள்,

உலோகம், மரம் என்பவை அடங்குகின்றன. சிற்பங்களை உருவாக்குபவர் ‘சிற்பி’ என்றழைக்கப்படுகிறார்.

சிற்ப வகைகள் – சிற்பங்கள் அதன் அமைப்பினைப் பொறுத்து கீழ்க்கண்ட வகைகளாகப் பிரிக்கப்படுகின்றன.

1. தனிச் சிற்பம் – இது நாற்புரமும் இருந்து பார்க்கும் விதமாக தனியாக அமைந்திருக்கும்.

2. புடைப்புச் சிற்பம் – சுவர்களில் ஒட்டிக் கொண்டு புடைப்பாக அமைந்திருக்கும் சிற்பம்.

3. இயங்கியல் சிற்பம் – இது இயக்கத்தோடு கூடிய சிற்பமாகும்.

4. சிலை – குறிப்பிட்ட பொருள், மனிதர், நிகழ்ச்சி, விலங்குகள் போன்றவற்றைப் போன்று செய்யப்படும் சிற்பம் ஆகும்.

தமிழகத்தின் கலைகள்

கலைகளின் விளைநிலம் சோழநாடு ஆகும். கட்டிடக்கலையும், சிற்பக்கலையும் கொழிக்கும் நகரம்

கும்பகோணம் ஒவ்வொரு சிற்பத்திலும் கதையோ காவியமோ பொதிந்திருக்கும். தமிழகத்தில் கற்சிற்பங்களை தொடங்கி வைத்த பெருமை பல்லவர்களையே சாறும். மாமல்லபுரம் பல்லவர்களின் கலைக் கூடமாக விளங்குகிறது.

பாண்டியர்களின் சிற்பக்கலை

கி.பி. 6,7,8 ஆம் நூற்றாண்டுகளில் பாண்டியர்கள் குகைகளில் அழகிய சிற்பங்களைப் படைத்தனர். உதாரணமாக திருமயம்,

பிள்ளையார்பட்டி, குன்றக்குடி, திருப்பரங்குன்றம் மற்றும் கி.பி. 8 ஆம் நூற்றாண்டில் கழுகுமலை ஒற்றைக்கல் கோயில் போன்ற இடங்களில் பாண்டியர்களின் கலை உன்னதம் படைப்புகளைக் காணலாம்.

சோழர் கால சிற்பங்கள்

பல்லவர்கள் போற்றி வளர்த்த சிற்பக்கலை சோழ மன்னர்கள் காலத்தில் மேலும் வளர்ந்தது. அதிகமாக தெய்வச் சிலைகள் உள்ளன. கி.பி.9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த

சிற்பங்கள் குடைந்தைக் கீழ்க் கோட்டம், சீனிவாச நல்லூர் அரங்கநாதர் கோவில், பசுபதி கோவில் அறநெறிசுரம், ஆகியவற்றில் உள்ளன. சைவம், வைணவம், சமணம், பௌத்தம் என அனைத்து சமய தெய்வங்களுக்கும் சோழர் காலத்தில் சிற்பங்கள் வடிக்கப்பட்டன.

தொடக்கத்தில் கோயில் கட்டுவதற்கு முதன்மை கொடுத்த சோழர்கள் பின் சிற்பங்களுக்கு முதன்மை கொடுத்தனர்.

தாராசுரம் கோயிலை ‘கலைகளின் சரணாலயம்’ எனலாம்.

பல்லவர் கால சிற்பங்கள்

மாமல்லபுரம் பல்லவர்களின் கலைக் கூடமாக விளங்குகிறது. மகிசாசுர மர்த்தினி குகை, ஆதிவராக மண்டபம், மும்மூர்த்தி மண்டபம் ஆகியவற்றில் நேர்த்தி மிக்க சிற்பங்கள் நம் கண்களைக் கவர்கின்றன.



24

17.12.2020

# பட்டாம்பூச்சி

தமிழ்நாடு மாநிலத்தின் சிறப்புச் சின்னங்களான பனை, மரகதப்புறா, செங்காந்தள் மலர், வரையாடு முதலியவற்றைப் போன்று பட்டாம்பூச்சி இனமொன்றையும் தேர்ந்தெடுக்கும் நோக்கில் குழுவொன்று மூன்றாண்டுகளாக

ஆய்வு மேற்கொண்டது. இறுதிக் கட்டத்தில் மலைச்சிறகன் எனும் தமிழ் மறவன் பட்டாம்பூச்சியையும் தமிழ் வலையிறகி பட்டாம்பூச்சியையும் ஒப்பிட்டனர். தலைமை வனக்காவலரின் பரிந்துரையின் பேரில் தமிழ் மறவனைத் தேர்ந்தெடுத்து தமிழ்நாட்டின் மாநிலப் பட்டாம்பூச்சியாக அறிவித்து அரசாணை வெளியிடப்பட்டது.

தமிழ் நாட்டின் உள்ளக இனமாகிய மலைச்சிறகன்களின் ஆங்கிலப் பொதுப்பெயரில் தமிழ் என்று வருவதாலும், மறத்தைப் போற்றிய தமிழர் பண்பாட்டை அடையாளங் காட்டுவதாலும் இன்னும் பல சிறப்புகளைக் கொண்டிருப்பதாலும் இவ்வினத்தை மாநிலப் பட்டாம்பூச்சியாகத் தேர்ந்தெடுத்தனர்.



25

18.12.2020

# நூலாராய்வு

சுவையான தகவல்கள்

1.திருக்குறளில் ‘தமிழ்‘ என்ற சொல் பயன்படுத்தப்படவில்லை.

2.திருக்குறள் முதன்முதலில் அச்சிடப்பட்ட ஆண்டு-1812.

திருக்குறளின் முதல் பெயர்- முப்பால்.

3.திருக்குறளில் உள்ள அதிகாரங்கள்-133.

4.திருக்குறள் அறத்துப்பாலில் உள்ள குறட்பாக்கள்-380.

5.திருக்குறள் பொருட்பாலில் உள்ள குறட்பாக்கள்-700.

6.திருக்குறள் காமத்துப்பாலில் உள்ள குறட்பாக்கள்-250.

7.திருக்குறளில் உள்ள மொத்த குறட்பாக்கள்-1330.

8.திருக்குறள், அகரத்தில் தொடங்கி னகரத்தில் முடிகிறது.

9.ஒவ்வொரு குறளும் இரண்டு அடிகளால், ஏழு சீர் களைக் கொண்டது.

10.திருக்குறளில் உள்ள சொற்கள்-14,000.

11.திருக்குறளில் உள்ள மொத்த எழுத்துக்கள்- 42,194.

12.திருக்குறளில், தமிழ் எழுத்துக்கள் 247-இல், 37 எழுத்துக்கள் மட்டும் இடம் பெறவில்லை.

13.திருக்குறளில் இடம்பெறும் இருமலர்கள்-அனிச்சம், குவளை.

14.திருக்குறளில் இடம்பெறும் ஒரே பழம்- நெருஞ்சிப்பழம்.

15.திருக்குறளில் இடம்பெறும் ஒரே விதை- குன்றிமணி.

16.திருக்குறளில் பயன்படுத்தப்படாத ஒரே உயிரெழுத்து-ஔ.

17.திருக்குறளில் இருமுறை வரும் ஒரே அதிகாரம்- குறிப்பறிதல்.

18.திருக்குறளில் இடம் பெற்ற இரண்டு மரங்கள்- பனை, மூங்கில்.

19.திருக்குறளில் அதிகம் பயன்படுத்தப்பட்ட (1705) ஓரெழுத்து-னி.

20.திருக்குறளில், ஒரு சொல், அதிக அளவில், அதே குறளில் வருவது "பற்று" - ஆறு முறை.

21.திருக்குறளில் ஒரு முறை மட்டும் பயன்படுத்தப்பட்ட இரு எழுத்துக்கள்-ளீ,ங.

22.திருக்குறளில் இடம்பெறாத இரு சொற்கள்- தமிழ், கடவுள் ( அகர முதல என தொடங்கும் முதல் குறள், கடவுள் வாழ்த்து அதிகாரத்தில் உள்ளது; இதில் ஆதி பகவன் - என்பது கடவுளைக் குறிக்கிறது).

23.திருக்குறள் மூலத்தை முதன் முதலில் அச்சிட்டவர்- தஞ்சை ஞானப்பிரகாசர்.

24.திருக்குறளுக்கு முதன் முதலில் உரை எழுதியவர்-மணக்குடவர்.

25.திருக்குறளை முதன் முதலில் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர்- ஜி.யு.போப்.

26.திருக்குறள் உரையாசிரியர்களுள் 10-வது உரையாசிரியர்-பரிமேலழகர்.

27.திருக்குறளில் இடம்பெறாத ஒரே எண்- ஒன்பது.

28.திருக்குறளில் கோடி என்ற சொல் ஏழு இடங்களில் இடம் பெற்றுள்ளது.

எழுபது கோடி என்ற சொல் ஒரே ஒரு குறளில் இடம் பெற்றுள்ளது.

ஏழு என்ற சொல் எட்டுக் குறட்பாக்களில் எடுத்தாளப்பட்டுள்ளது.

29.திருக்குறள் இதுவரை 107 மொழிகளில் வெளிவந்துள்ளது.

30.திருக்குறளை ஆங்கிலத்தில் 40 பேர் மொழி பெயர்த்துள்ளனர்.

31.திருக்குறள், நரிக்குறவர் பேசும் வக்போலி மொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.



26

19.12.2020

# தமிழ்த்தாய் வாழ்த்து

தமிழ்த்தாய் வாழ்த்து பற்றிய ஒரு தகவல்.

1967 ஆம் ஆண்டு திராவிட முன்னேற்றக் கழகம் தமிழகத்தில் ஆட்சியைக் கைப்பற்றியது. 6.3.1967 இல் பேரறிஞர் அண்ணா துரை அவர்கள்

தமிழகத்தின் முதலமைச்சராய் பொறுப்பேற்றார்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் முதலமைச்சராய் பொறுப்பேற்றபின் அரசு விழாக்கள், தமிழ் மொழியினைச் சிறப்பிக்கும் பாடல் ஒன்றுடன் தொடங்கப்படுமேயானால், தமிழ் மொழியின் சிறப்பு பாமரர்களையும் சென்றடையும் என்று எண்ணினார். அதற்குரிய பாடலைத் தேர்ந்தெடுக்க எண்ணி, பல பாடல்களை ஆராய்ந்த பொழுது, இரண்டே இரண்டு

பாடல்கள்தான் அண்ணாவின் கவனத்தையும், மனதையும் ஒருசேரக் கவர்ந்திழுத்தன.

முதல் பாடல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தால், தமிழ்த் தாய் வாழ்த்தாக அறிமுகம் செய்யப் பெற்ற, மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய நீராருங் கடலுடுத்த என்னும் பாடல்.

இரண்டாவது பாடல் கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் சொந்தப் பாடல். ஆம், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் முதல்

செயலாளர், கரந்தைக் கவியரசு அரங்க. வேங்கடாசலம் பிள்ளை இயற்றிய தமிழ்த் தாய் வாழ்த்துப் பாடல்தான் அது..

வானார்ந்த பொதியின்மிசை வளர்கின்ற மதியே

மன்னியமூ வேந்தர்கடம் மடிவளர்ந்த மகளே

தேனார்ந்த தீஞ்சுனைசால் திருமாலின் குன்றம்

தென்குமரி யாயிடைநற் செங்கோல்கொள் செல்வி

கானார்ந்த தேனே கற்கண்டே

நற்கனியே

கண்ணே கண்மணியே அக்கட்புலம்சேர்

தேவி

ஆலாத நூற்கடலை அளித்தருளும்

அமிழ்தே

அம்மே நின் சீர்முழுதும்

அறைதல்யார்க் கெளிதே?

கரந்தைக் கவியரசு

கரந்தைத் தமிழ்ச் சங்கத்தால் தமிழ்த் தாய் வாழ்த்தாக அறிமுகம் செய்யப்பெற்ற பாடலையும், கரந்தைத்

தமிழ்ச் சங்கத்தின் சொந்தப் பாடலையும், படித்துப் படித்து மயங்கிய பேரறிஞர் அண்ணா அவர்கள், கரந்தைக் கவியரசர் அவர்களின் பாடலையே, தமிழக அரசின் தமிழ்த் தாய் வாழ்த்தாக தேர்வு செய்ய விரும்பினார். எனினும், திராவிடத்தின் எழுச்சிக்காகவும், வளர்ச்சிக்காகவும் போராடிய போராளி அண்ணா அவர்களை, மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை அவர்களின் பாடலில் உள்ள

தெக்கணமும் அதிற்சிறந்த திராவிடநற்

றிருநாடும்

என்னும் வரியிலுள்ள திராவிட என்னும் வார்த்தை சுண்டி இழுத்தது.

எனவே, மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை அவர்களின் பாடலையே தமிழ்த்தாய் வாழ்த்தாக, அரசு விழாக்களின் போது பாட வேண்டும் என அறிவுறுத்தும் வகையில் அரசு ஆணை வெளியிட ஏற்பாடு செய்தார். ஆனால் எதிர்பாராத வகையில் உடல் நலம் குன்றிய பேரறிஞர் அண்ணா அவர்கள்

3.2.1969 இல் இவ்வுலக வாழ்வைத் துறந்ததனால், அரசு அணை வெளிவருவதில் தாமதம் ஏற்பட்டது. அண்ணாவைத் தொடர்ந்து நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் சில நாட்கள் தமிழகத்தின் பொறுப்பு முதல்வரானார். 10.2.1969 அன்று டாக்டர் கலைஞர் அவர்கள் தமிழகத்தின் முதல்வராய் அரியனையில் அமர்ந்தார்.

டாக்டர் கலைஞர் அவர்கள் முதல்வராய் பொறுப்பேற்ற அடுத்த வருடமே, 23.11.1970 ஆம் நாளன்று,

மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளை அவர்கள் இயற்றிய நீராரும் கடலுடுத்த என்னும் தமிழ்த் தாய் வாழ்த்துப் பாடலை, அரசு நிகழ்ச்சிகளில் பாட வேண்டும் என, அரசு பொதுத் துறையின் சார்பாக அரசாணை வெளியிடப் பெற்றது.

அரசு ஆணை

தமிழ்த் தாய் வாழ்த்துப் பாடலுக்கு முதன் முதலில் மெட்டமைத்து இசையமைத்தப் பெருமைக்கு உரியவர் மெல்லிசை மன்னர் எம்.எஸ்.

விசுவநாதன் அவர்களாவார். மெல்லிசை மன்னர் இசையமைத்த நீராருங் கடலுடுத்த பாடலினை உள்ளடக்கிய, ஒலித் தட்டு ஒன்றும், அரசு ஆணையுடன், தமிழகத்தில் உள்ள அனைத்து அரசுத் துறை அலுவலகங்களுக்கும் அனுப்பப் பட்டது. இதன் பயனாக நீராருங் கடலுடுத்த பாடலானது தமிழகத்தின் மூலை முடுக்கெல்லாம் பரவியது.



27

20.12.2020

# சங்ககாலத்தில் ஏரிகள்

தமிழரின் நீர் மேலாண்மை அறிவுக்கான முதன்மையான சான்று ஏரிகள்தான் என்கிறார்கள் வல்லுநர்கள்.

ஏரிகள் குறித்த எண்ணற்ற சான்றுகள் சங்க இலக்கியங்களில் உள்ளன. "சிறுபஞ்சமூலம்" நூலில் காரியாசான்

எப்படி ஏரிகள் அமைக்கப்பட வேண்டும் என்ற சித்திரத்தை தருகிறார். அதாவது

"குளந்தொட்டு கோடு பதித்து, வழி சித்து

உளந்தொட்டு உழவயலாக்கி -

வளந்தொட்டு பாடு படுங்கிணற்

றோடென்றிவ்வைம் பாற்கடுத்தான்

ஏகுசுவர்க்கத் தினிது."

என்கிறது அந்த பாடல்.

பொருள்:

"குளம் (குளம் தொட்டு). கலிங்கு (கோடு பதித்து), வரத்துக்கால், மதகுகள்,

மிகைநீர் போகும் கால்கள் ஆகிய வழிகளை அமைத்தல் (வழி சித்து), பண்ணை மேம்பாட்டுப் பணிகள் மூலம் ஆயக்கட்டு பகுதிகளை உருவாக்குதல் (உழுவயலாக்கி) பொதுக்கிணறு அமைத்தல் (கிணறு).ஒரு ஏரியை இந்த ஐந்து அங்கங்களுடன் அமைப்பவன் சொர்க்கத்துக்கு செல்லுவான்,"

இதுதான் பாடலின் பொருள்.



28

21.12.2020

# கால வகைப்பாடு

மு. வரதராசனின் ‘தமிழ் இலக்கியம்’ நூலில் தமிழ் இலக்கிய கால வகைப்பாடு,

பழங்காலம்

சங்க இலக்கியம் (கிமு 300 - கிபி 300)

நீதி இலக்கியம் (கிபி 300 - கிபி 500)

இடைக்காலம்

பக்தி இலக்கியம் (கிபி 700 - கிபி 900)

காப்பிய இலக்கியம் (கிபி 900 கிபி 1200)

உரைநூல்கள் (கிபி 1200 - கிபி 1500)

புராண இலக்கியம் (கிபி 1500 - கிபி 1800)



29

22.12.2020

# தமிழ் எண்ணுருக்கள்

௧ = 1

௨ = 2

௩ = 3

௪ = 4

௫ = 5

௬ = 6

௭ = 7

௮ = 8

௯ = 9

௰ = 10

௰௧ = 11

௰௨ = 12

௰௩ = 13

௰௪ = 14

௰௫ = 15

௰௬ = 16

௰௭ = 17

௰௮ = 18

௰௯ = 19

௨௰ = 20

௨௰௧ = 21

௨௰௨ = 22

௨௰௩ = 23

௨௰௪ = 24

௨௰௫ = 25

௨௰௬ = 26

௨௰௭ = 27

௨௰௮ = 28

௨௰௯ = 29

௩௰ = 30

௩௰௧ = 31

௩௰௨ = 32

௩௰௩ = 33

௩௰௪ = 34

௩௰௫ = 35

௩௰௬ = 36

௩௰௭ = 37

௩௰௮ = 38

௩௰௯ = 39

௪௰ = 40

௪௰௧ = 41

௪௰௨ = 42

௪௰௩ = 43

சயச = 44

சயரு = 45

சயகூ = 46

சயஎ = 47

சயஅ = 48

சயகூ = 49

ருய = 50.



30

24.12.2020

# நீர் ஆதாரங்கள்

தமிழர்கள் உருவாக்கிப் பராமரித்து வந்த நீர் ஆதாரங்கள்.

அகழி : பெரிய கோயில்கள் மற்றும் கோட்டைகளைச் சுற்றி இருக்கும் நீர் நிலை.

ஆழ்கிணறு : கிராமங்களி விவசாயம் மற்றும் குடிநீர் தேவையைப் பூர்த்தி

செய்ய தோண்டப்பட்டிருக்கும் நீர் நிலை.

இலஞ்சி : ஒரு சிறிய நீர் தேக்கம். பெரும்பாலும் குடிநீருக்காகவே பயன்படுத்தப்படுகிறது.

கட்டுங்கிணறு : சரளை நிலத்தில் வெட்டி இருப்பார்கள். செங்கல்லால் உட்புறச்சுவர் எழுப்ப்ப்பட்டிருக்கும்.

கண்மாய்: அளவில் சிறியதாய் இருக்க்க்கூடிய ஏரி பாண்டிய நாட்டில் இதனை கண்மாய் என்று குறிப்பிடுகிறார்கள்.

கலிங்கு : ஏரி முதலிய பாசன நீர்த்தேக்கங்கள் உடைப்பு எடுக்காமல் இருக்க முன் எச்சரிக்கையாக கட்டப்பட்டு பல கைகளால் அடைத்து திறக்க்க்கூடிய (விட்டர்ஸ்) மாதிரியான கட்டமைப்பு.

கால் : சாதாரணமாக நீர் ஓடும் வழியைக் கால் என்று சொல்வார்கள்.

கால்வாய்: ஏரி, குளம், ஊருணி போன்ற நீர் நிலைகளுக்கு தண்ணீர் கொண்டு செல்லும் “பாயும் கால்” வழி.

குட்டை : கால் நடைகளை குளிப்பாட்டப் பயன்படும் சிறிய நீர் நிலை.

குட்டம் : அளவில் கொஞ்சம் பெரிதாக இருக்கும். குட்டைகளை குட்டம் என்று குறிப்பிடுகிறார்கள்.

குண்டு: சிறிய அளவில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் குளிக்கும் நீர்நிலை/செயற்கையாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் நீச்சல் குளங்கள்இந்த குண்டு வகையைச் சார்ந்தவைதான்.

குண்டம்: குளிப்பதற்க்க உள்ள சிறிய களம் தான் குண்டம் என்று குறிப்பிடப்படுகிறது.

குமிழி ஊற்று: நிலத்தின் பாறையைக் குடைந்து ஆழ ஊற்றை மேல் எழுப்பி வரச் செய்யும் குடைபோன்ற கிணறு.

குளியல் குளம்: ஊரின் நடுவே மக்கள் குளிக்கப் பயன்படுத்தும் நீர் நிலை.

பாசனகுளம் : உருக்கு வெளியே பாசனத்திற்காகப் பயன்படுத்தும் நீர்நிலை.

கூதும் : ஒழுங்காக வெட்டப்பட்ட கிணறு.

கூவல்: ஆழமற்ற கிணறு போன்ற பள்ளம்.

கேணி: அகலமும், ஆழமும் உள்ள பெரிய கிணறு.

சிறை: தேக்கப்பட்ட பெரிய நீர் நிலை.

சுணை: கால்நடைகளை குளிப்பாட்டப் பயன்படும் சிறிய நீர் நிலை.

சேங்கை : பாசிக்கொடி மண்டிய குளம்.

தடாகம் : நான்கு புறமும் அழகாக்க் கட்டப்பட்ட குளம்.

தணிக்குளம்: கோயிலின் நான்கு புறத்தையும் சுற்றி அமைந்துள்ள அகழிபோன்ற நீர் நிலை.

தாங்கல் : காஞ்சிபுரம், செங்கல்பட்டு ஆகிய பகுதிகளில் ஏரியைக்குறிக்கும் சொல் தாங்கல்.

திருக்குளம் : கோயிலின் அருகே அமைந்த நீராடும் குளம்.

தெப்பக்குளம்: தெப்பம் சுற்றி வரும் வகையில் அமைக்கப்பட்ட கோயிலின் திருக்குளம்.

தொடுகிணறு : ஆற்றின் உள்ளேயும், அருகிலும் அவ்வப்போது மணலைத் தோண்டி நீர் எடுக்கும் இடம்.

நடைகேணி: இறங்கிச் செல்லும் படிக்கட்டுகளுடன் கூடிய பெரிய கிணறு.

நீராழி : நடுவில் மண்டபத்துடன் கூடிய பெருங்குளம்.

பொங்குகிணறு : ஊற்றுக்கால் கொப்பளித்துக்கொண்டே இருக்கும் கிணறு.

பொய்கை : தாமரை முதலியன மண்டிக்கிடக்கும் இயற்கையாய் அமைந்த நீண்ட நீர் நிலை.

மறுகால் : அதிக நீர் கழிக்கப்படும் பெரிய வாய்க்கால்.

வலயம் : வட்டமாய் அமைந்த குளம்.

வாய்க்கால் : ஏரி முதலிய நீர் நைலகளிலிருந்து பயிருக்கு நீர் பாய்ச்ச சிறிய கால்.

ஆழிக்கிணறு : கடல் அருகில் தோண்டிக் கட்டிய கிணறு.

ஆறு: பெருகி ஓடும் ஏரி.

உறைகிணறு : மணற்பாங்கான இடத்தில் தோண்டி சுடுமண்ணில் வளையமிட்ட கிணறு.

ஊற்று: பூமிக்கு அடியில் இருந்து நீர் ஊறி வரும் நீர் நிலை.

ஏரி: வேளாண்மைப்பாசனம் செய்வதற்கான பெரிய நீர்த்தேக்கம்.

ஓடை: ஆழத்தில் இருந்து ஊற்றெடுக்கும் நீர், எப்போதும் ஊறி ஓடிக் கொண்டேயிருக்கும் நீர் நிலை.

